THE HON. SRI M. A. MANICKAVELU : இதற்காக ஒரு திட்டம் தயாரித்து அதையும் சேர்த்து ஒரு காம்ப்ரஹன்ஸீவ் திட்டமாக கொண்டுவர வேண்டும் என்று அரசாங்கம் திட்டமிட்டிருக்கிறது. சில இடங்களில் கிணறுகள் வெட்டும்போது நல்ல தண்ணீர் கிடைப்பதில்லை. சில இடங்களில்தான் நல்ல தண்ணீர் கிடைக்கிறது. கூடிய வரையில் நல்ல தண்ணீர் கிடைப்பதற்கு; வேண்டிய முயற்சிகளை அரசாங்கம் எடுத்து வருகிறது.

Government have sanctioned the proposal of the Collector of South Arcot for the provision of a bore-well with a overhead tank and alum treatment plant for the supply of protected water to the villages of Kadambuliyur, Purangudi and Melambattu.

SRI K. ANBAZHAGAN: காடாம்புலியூர் பகுதியில் தேசீய தண்ணீர் வழங்கும் திட்டத்தின்கீழ் நல்ல சுத்தம் செய்யப்பட்ட தண்ணீர் வசதி செய்து கொடுப்பதற்கு திட்டம் இருப்பதாக சொல்லப்பட்டது. அந்த திட்டத்திற்கு தேசீய தண்ணீர் வழங்கும் திட்டத்தின்கீழ் மத்திய அரசாங்கத்திலிருந்து தேவையான பணத்தைப் பெற முயற்சிப்பீர்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : கனம் அங்கத்தினர் கேட்ட கேள்வியைப்பற்றி ஆராய வேண்டும். அதை ஆராய்ந்து பார்க்கிறேன்.

SRI A. GOVINDASAMY : எங்கள் மாவட்டத்தைச் சேர்ந்த கனம் ராமசாமி படையாச்சி அவர்கள் மந்திரியாக இருந்த சமயத்தில் அந்தப் பகுதியில் இந்த திட்டத்திற்காக 30 லட்சம் ரூபாய் செலவு செய்து தண்ணீர் வழங்கப்படும் என்று பிரசாரம் செய்யப்பட்டது. இப்பொழுது இரண்டு ஆண்டுகளுக்குப் பின்னும் அது ஏன் நடைபெறுமல் இருக்கிறது. அது எப்போது நடைமுறைக்கு வரும் ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்தப் பிரச்னையில் அந்த மந்திரியை இழுக்க வேண்டிய அவசியமில்லை. அரசாங்கம் இதைப் பற்றி கவனிக்கும்.

*Nationalization of Bus services*

* 220 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the
1-20 p.m. Minister for Industries be pleased to state—

(*a*) whether there is a proposal to extend the nationalization of bus services; and

(*b*) if so, the details thereof?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) Yes, Sir.

(*b*)—

| | Route. | Minimum number of buses to be run. |
|---|---|---|
| 1 | Madras (Mint) to Tiruvothiyur (Route No. 56) ... ... ... ... ... | 13 |
| 2 | Madras (Mint) to Ennore (Route No. 56-A). | 3 |
| 3 | Madras (Mint) to Red Hills (Route No. 57). | 4 |
| 4 | Madras (Broadway) to Lattice Bridge (Route No. 19) ... ... ... ... | 4 |
| 5 | Madras (Parry's and Broadway) to Villivakkam (Route No. 20) ... ... | 10 |

SRI N. K. PALANISAMI : ஸார், சென்னை நகரத்தின் சுற்றுப் புரங்களில் பஸ்களை தேசீய மயமாக்குவதை விஸ்தரிப்பதைவிட, பாக்கி

6th March 1958]

மாகாணங்களைப் போல, தனிப்பட்டவர்கள் பஸ் பர்மிட் காலம் முடிந்த பிறகு புதுப்பிக்க வரக்கூடிய காலத்தில் சர்க்கார் படிப்படியாக எல்லா இடங்களிலும் பஸ்களை என் தேசிய மயமாக்கக் கூடாது ?

THE HON. SRI R. VENKATARAMAN: கனம் அங்கத்தினர் அவர்கள் நல்ல யோசனை சொல்லுகிறார்கள். சர்க்காரிடம் போதுமான பணம் இருந்தால் ஒரே நாளில் அதைச் செய்துவிட முடியும்.

SRI A. A. RASHEED: Is it not a fact that the buses plying in the City are not enough for the peak-hour traffic and if so, will the fleet of the buses be increased in the City?

THE HON. SRI R. VENKATARAMAN: Sir, it is true that the number of buses plying in the City is not enough to carry the peak-hour load but anybody who is familiar with the City Transport problem will acknowledge that the peak-hour traffic has not been handled successfully even by the biggest City in the world, New York. There is bound to be a great strain on the traffic during peak-hour.

SRI N. K. PALANISAMI: ஸார், சர்க்காரிடம் இப்போது போக்குவரத்தை தேசிய மயமாக்கும் திட்டம் இருக்கிறதா ? அப்படியானால் அதன் விவரம் என்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN: தேசிய மயமாக்கும் திட்டம் சர்க்காரிடம் இருக்கிறது. ஆனால் எப்போது, எப்படி, எந்த முறையில் அது அமுல் நடத்தப்பட வேண்டுமென்பது யோசித்துச் செய்யப்படும்.

SRI S. NAGARAJA MONIGAR: அப்படி தேசிய மயமாக்கும் திட்டம் ஏற்கெனவேயே போடப்பட்டு விட்டதா ? அப்படியானால், எத்தனை வருஷத்தில், வருஷம் ஒன்றுக்கு எத்தனை ரூட்டுகள் வீதம் நேஷனலைஸ் செய்யத் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. மந்திரி அவர்கள் பதில் சொல்லும்போது பணம் இல்லையென்று சொன்னார்கள். அப்படியானால் வருஷம் ஒன்றுக்கு ஒன்றிரண்டு ரூட்டுகளில் மொப்பூஸில் பஸ்களை எடுத்து நடத்த சர்க்கார் முன் வருவார்களா ?

THE HON. SRI R. VENKATARAMAN: கனம் அங்கத்தினருடைய அபிப்பிராயம் மொப்பூஸில் பஸ்களை எடுத்து நடத்த வேண்டுமென்பது என்று நினைக்கிறேன். அவ்வப்போது நிதி நிலைமையை உத்தேசித்து, அவசியத்தை யோசித்து இந்த தேசிய மயமாக்கும் திட்டம் விஸ்தரிக்கப்படும்.

SRI T. S. RAMASWAMY PILLAI: May I know whether there was a proposal to nationalize the bus routes in the Kanyakumari district and extend it to Tirunelveli and also whether there was a notification to that effect in the *Fort St. George Gazette* and if so, the present stage at which the matter stands?

THE HON. SRI R. VENKATARAMAN: Sir, there was a proposal under consideration by the Government to extend the nationalization of the transport from Kanyakumari to Tirunelveli. A notification was issued in this behalf and then the Government have found that it is not possible to take over all the buses at one time. Therefore, they have given it up. They will progressively nationalize the routes as and when funds permit.

SRI M. KALYANASUNDARAM: ஸார், மந்திரி அவர்கள் குறிப்பிட்ட இந்த ஐந்து இடங்களில் மட்டும் பஸ் போக்குவரத்தை சர்க்கார் எடுத்து நடத்த வேண்டுமென்று துரிதமாக நடவடிக்கை எடுப்பதன்

[6th March 1958

காரணம் என்ன ? அந்த ரூட்டுகளை எடுத்து நடத்துவதற்குப் போதுமான பஸ்கள் இருக்கின்றனவா ? அல்லது புதிய பஸ்கள் வாங்கப்பட்டு விட்டனவா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இந்த ஐந்து ரூட்டு களிலும் இப்போது சர்க்கார் பஸ்களும், தனியார் பஸ்களும் ஓடுகின்றன. இவ்வாறு ஓடுவதால் சில கஷ்டங்கள் சர்க்கார் பஸ்களுக்கு ஏற்பட்டன. அவைகள் என்னவென்ருல், தனியார் பஸ் விடுகின்றவர்கள் சர்க்கார் பஸ் வருகின்ற வரையில் ஸ்டாண்டில் நிற்கிருர்கள். சர்க்கார் பஸ்ஸைக் கண்ட வுடன் அடுத்த ஸ்டாண்டுக்குப் போய் விடுகின்ருர்கள். சர்க்கார் பஸ்கள் இந்த விதமான தவறுகள் செய்ய முடியாது. குறித்த காலத்தில் போக வேண்டியிருப்பதால் அங்கு ஸ்டாண்டில் உள்ள பாஸஞ்சர்களை யெல்லாம் தனியார் பஸ்களை விடுகின்றவர்கள் ஏற்றிச் சென்று விடுவதால், சர்க்கார் பஸ்களுக்கு அதிகப் பாஸஞ்சர்கள் கிடைப்பதில்லை. ஆகையால்தான் இந்த பஸ் ரூட்டுகளை எடுத்துக்கொள்ள முடிவு செய்தோம். இவ்வாறு எடுக்கப் படும் இந்த ஐந்து ரூட்டுகளிலும் தனியார் துறையில் இருந்த பஸ்களின் எண்ணிக்கை 15. சர்க்காருக்கு இப்போது 15 பஸ்கள் போட வசதி இருக் கின்றது. மேற்கொண்டு அங்கத்தினர்கள் இந்த பட்ஜெட்டைப் பாஸ் செய் தால் அதில் 72 பஸ்கள் அடுத்த வருஷம் கட்ட யோசனை செய்திருக் கிறோம். பஸ்கள் குறைவாக இருக்கும் என்ற கவலை வேண்டியதில்லை.

SRI A. V. P. ASAITHAMBI : சென்னை நகரத்தைத் தவிர இதரப் பகுதிகளிலுள்ள பஸ்கள் பூராவையும் உடனடியாக தேசீய மய மாக்குவது சாத்திய மில்லையென்பது உண்மையென்ருலும், சென்னை நகரத்தைப் போல திருச்சி, மதுரை, திருநெல்வேலி முதலிய நகர பஸ் சர்வீஸை மாத்திரம் உடனடியாக தேசீய மயமாக்குவதைப் பற்றி யோசிப் பார்களா ?

THE HON. SRI R. VENKATARAMAN : ஒரு பஸ் ரூட்டை தேசீய மயமாக்கினுல் அதற்கு முக்கியமான சாதனம் வொர்க்ஷாப். ஒவ்வொரு ஊரிலும் வொர்க்ஷாப் வைத்துக் கொண்டு பஸ் சர்வீஸ் நடத்தினுல் கட்டுபடியாகாது. ஆகவேதான் இந்த தேசிய மயமாக்கும் திட்டத்தை விஸ்தரிக்கும்போது வொர்க்ஷாப் இருக்கும் இடத்திற்குப் பக்கத்திலிருந்து விஸ்தரிக்கப்பட வேண்டுமென்பது சர்க்காருடைய அபிப் பிராயம்.

SRIMATHI T. N. ANANDANAYAKI : கன்னியாகுமரி பஸ் சர்வீஸை நம்மிடம் கொடுக்கும்போது அந்த திருவாங்கூர்-கொச்சி சர்க்கார் ஓட்டை பஸ்களாகக் கொடுத்தார்களென்று சொல்லப்படுகிறதே, அது உண் மையா ? அது உண்மையானுல் அந்தத் திருவாங்கூர்-கொச்சி சர்க்காரிடம் நஷ்ட ஈடு வாங்க சர்க்கார் நடவடிக்கை எடுப்பார்களா என்று அறிய விரும்புகிறேன்.

MR. SPEAKER : The question is not well worded.

THE HON. SRI R. VENKATARAMAN : The hon. Member may put a separate question.

MR. SPEAKER : கேள்வி கேட்கும்போது இன்னொரு பிர தேசத்தைக் குறை கூறுவது தவறு.

SRI M. P. SUBRAMANIAM : அரசாங்கம் பஸ்களை தேசீய மயமாக்க வேண்டுமென்று ஒப்புக்கொண்டிருப்பதனுல், இப்போது இருக்கும் பஸ்களை எடுத்துக் கொள்வது தாமதமானுலும் கொடுக்கும் புதிய பஸ்களை அரசாங்கம் எடுத்து நடத்த முன் வருவார்களா என்று அறிய விரும்பு கிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : நான் இதற்கு முன்பு ஒரு கேள்விக்கு பதில் சொன்னேன். ஒரு வொர்க்ஷாப்பை வைத்துக் கொண்டு அதைச் சுற்றி பஸ் ரூட்டுகளை எடுத்துக்கொள்ள முடியும். தனித்

6th March 1958]

தனியாக, திட்டுத் திட்டாக எடுப்பது சாத்தியமல்ல. ஆகவேதான் விஸ்தரிக்கும்போது சென்னை நகரத்தைச் சுற்றிலும், கன்னியாகுமரியைச் சுற்றிலும் வொர்க்ஷாப் அடிப்படையில் விஸ்தரிக்கப்படுகிறது.

SRI D. S. AUTHIMOOLAM : ஸார், பஸ்கள் எல்லாவற்றையும் தேசீய மயமாக்க ஏராளமான மூலதனம் தேவை என்று சொல்லப் படுவதால், அந்த மூலதனத்தைத் திரட்ட நம்முடைய ஜனங்களிடம் சொன்னால் லோன் மூலமாக இலகுவாக வசூல் பண்ணிவிட முடியும். அந்த முறையில் இந்திய சர்க்காரிடம் உத்திரவு வாங்கி அடுத்த வருஷத்திற்குள் எடுத்துக்கொள்ள அரசாங்கம் நடவடிக்கை எடுக்குமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : அடுத்த வருஷத்திற்குள் இயலாது. படிப்படியாகச் செய்து கொண்டு போனால்தான் நன்றாக திறமையாக நடத்த முடியும்.

SRI P. S. CHINNADURAI : ராஜ்ய முழுவதிலும் உள்ள பஸ் போக்குவரத்தை அரசாங்கம் எடுத்து நடத்த வேண்டுமானால் எவ்வளவு தொகை தேவைப்படும் என்று ஏதாவது புள்ளி விவரம் சர்க்கார் தயாரித்திருக்கிறார்களா ? இல்லையானால் அதற்கு ஏற்பாடுகளைச் செய்வார்களா ?

THE HON. SRI R. VENKATARAMAN : அதைப்பற்றி ஒரு தனிக் கேள்வி போட்டால் விவரங்கள் தயாரிக்கப்படும்.

SRI V. SANKARAN : மதுரையிலே சென்னை நகரத்தை விட நல்ல முறையிலே திருப்திகரமாக டவுன் பஸ் நடக்கிறது. அப்படியிருக்கும் நிலையிலே பொது மக்களுக்கு அதிருப்தியை உண்டாக்கும் வகையில் சர்க்கார் அதைத் தேசீய மயமாக்க மாட்டார்களல்லவா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : ஒவ்வொருவருக்கு தேச பக்தி யுண்டு. சிலருக்கு நாட்டு பக்தியுண்டு. நண்பருக்கும் நகர பக்தி இருக்கிறது. (சிரிப்பு.)

SRI K. ANBAZHAGAN : பஸ் போக்குவரத்தை நாட்டு உடமை யாக்குவதில் பக்கத்தில் தொழிற்சாலை இருக்கக் கூடியவைகளை மட்டும்தான் தேசீய மயமாக்க முடியும் என்று அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். மிகப் பெரிய பஸ் கம்பெனிகளில் பழுது பார்க்கும் தொழில் நிலையத்துடன் இருக்கக்கூடியவைகளை அந்தத் தொழில் நிலையத்துடன் சேர்த்து நாட்டு உடமையாக்க அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : ஸார், இதையெல்லாம் ஹைபாத்தெடிகல் க்வெஸ்டியன் என்று சொல்வார்கள்.

MR. SPEAKER : The Hon. Minister need not answer it.

### *Military College, Dehra Dun*

*221 *Q.*—SRI M. P. SARATHI : Will the Hon. the Chief Minister be pleased to state the number of persons selected from this State for training at Dehra Dun Military College in 1956–57 and 1957–58?

THE HON. SRI C. SUBRAMANIAM : The particulars are given below :—

1956—Only one person was selected.

1957—Only one person was selected.

1958—Two persons were selected for the first term.